[Mr. Speaker] [10th September 1960

last hour and date for the withdrawal of the candidature to 10 a.m. to-day, the 10th September 1960. Poll, if necessary, will be held on a date to be fixed by me in due course.

### (2) ASSOCIATION OF LEGISLATIVE COUNCIL MEMBERS WITH THE COMMITTEE ON ESTIMATES.

MR. SPEAKER : I have to announce that the following five Members have been nominated by the Legislative Council to associate with the Committee on Estimates of the Legislative Assembly for the year 1960-61 :—

(1) Sri T. P. Srinivasavaradan,
(2) Sri N. Nallasenapathi Sarkarai Manradiar,
(3) Sri M. Rajagopal Pillai,
(4) Sri A. Chidambara Mudaliar, and
(5) Sri S. T. Adityan.

## IV.—CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 41 *RE* REFUSAL TO GRANT EDUCATIONAL CONCESSIONS TO SCHEDULED CLASS PUPILS IN SUCHINDRUM ENGLISH HIGH SCHOOL.

MR. SPEAKER : I have received a notice under Rule 41 of the Assembly Rules from Sri T. S. Ramaswami calling the attention of the Hon. the Minister for Works to a matter of urgent public importance, viz., refusal to grant educational concessions and scholarships to some Scheduled Class pupils of the S.M.S.M. English High School, Suchindrum, in Kanyakumari district and the consequent refusal of the school authorities to admit them in the classes.

The hon. Member, Sri T. S. Ramaswami, will now speak.

SRI T. S. RAMASWAMI : கனம் சபா நாயகர் அவர்களே, கன்னியாகுமரி ஜில்லாவிலே வேடர் வகுப்பைச் சேர்ந்த 13 மாணவர்கள் இரண்டு, மூன்று வாரமாக எஸ்.எம்.எஸ்.எம். இங்கிலீஷ் ஹைஸ்கூலிலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். காரணம் பட்டியலிலே வேடர்கள் என்று இருக்கிறது. அவர்கள் வேறு பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அங்கே சாதாரணமாக ஒரு பெயரை ஒவ்வொருவர் ஒவ்வொரு மாதிரியாக வைத்துக்கொள்வதைப் போல ஒரே ஜாதியினருக்கே இரண்டு, மூன்று பெயர்களை வைத்துக்கொள்ளுகிறார்கள். பறையர்கள் என்ற பெயரை யாரும் விரும்புவதில்லை. பறையா என்று ஷெட்யூல்ட் காஸ்ட் லிஸ்ட்டில் இருக்கிறது. சாம்பவர்கள் என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதே போல் வேடர்கள் என்பதை வேட்டைக்காரர்கள் என்று வைத்துக்கொள்வதுண்டு. யாரெல்லாம் வேட்டைக்காரர்கள் என்று வைத்துக்கொண்டிருக்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் சலுகை கொடுக்கவில்லை. வருஷந்தோறும் கலெக்டர் இரண்டும் ஒரே ஜாதிதான் என்று எழுதிக்கொண்டிருக்கிறார்கள். சென்ற பள்ளிக்கூட வருஷத்திலே ஜனவரி மாதத்திலே கலெக்டரிடமிருந்து ஷெட்யூல்ட் காஸ்ட் கமிஷனருக்கு எழுதியனுப்பப்பட்டிருக்கிறது. அவர்களுடைய பெயரையும் சேர்க்கவேண்டுமென்று எழுதியும் காலதாமதம் காரணமாக அவர்களுக்கு